குர்ஆன் மற்றும் நபிமொழிகளில்
இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட

மற்றும்

நாம் அன்றாடம் செய்யும்
செயல்களுடன் ஓத வேண்டிய

# பிரார்த்தனைகள்

## உள்ளே!



Compiled by Sheikh K.L.M. Ibrahim Madani
COCG, Industrial City, Jeddah



Compiled by islamkalvi.com team, source from Hisnul Muslim (Tamil). Reviewed by Sheik Syed Imran Madani, Chennai

பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்

# முன்னுரை

பிரார்த்தனை ஒரு வணக்கம் என்பதாக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நாம் எல்லா உதவிகளையும் அல்லாஹ்விடம் இருந்தே பெற்றுக் கொள்ள வேண்டும். உரிய முறையில் நாம் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கும் போது நம் பிரார்த்தனைகளை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான். குர்ஆனில் அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்.

இன்னும் உங்களுடைய இரட்சகன் கூறுகின்றான். நீங்கள் என்னையே அழை(த்து பிரார்த்தியுங்கள்) நான் உங்களு(டைய பிரார்த்தனை)க்கு பதிலளிப்பேன். (அல்முஃமின்:60).

(நபியே!) என் அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால் “நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன். பிரார்த்தனை செய்பவரின் பிரார்த்தனைக்கு அவர்

பிரார்த்தித்தால் விடையளிக்கிறேன். அவர்கள் என்னிடமே (பிரார்த்தித்து) கேட்கட்டும். என்னையே நம்பட்டும். அப்பொழுது அவர்கள் நேர்வழியை அடைவார்கள் என்று கூறுவீராக! (2:186)."

ஆகவே, நாம் அல்லாஹ்விடத்தில் மட்டுமே பிரார்த்தித்து ஈருலக வெற்றிகளையும் பெறுவோமாக! அல்லாஹ்வுடைய படைப்பினங்களிடம் அவர்கள் வலியுல்லாக்களாக இருந்தாலும், எக்காரணம் கொண்டும், எந்நிலையிலும் பிரார்த்திக்கக் கூடாது. அப்படி பிரார்த்திப்பது அல்லாஹ்விற்கு இணை கற்பிக்கும் மாபெரும் குற்றமாகும். இன்னும் நாம் செய்யும் பிரார்த்தனைகளை நபி(ஸல்) அவர்கள் கற்றுத்தந்த முறைப்பிரகாரம் செய்வோமாக!

இக்கையடக்க பிரார்த்தனைப் பேழையில் குர்ஆனிலிருந்தும் நபி மொழியிலிருந்தும் சில துஆக்களும் அன்றாடம் நாம் செய்யும் செயல்களுடன் நாம் ஓதுவதற்காக

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் கற்றுத்தந்த பிரார்த்தனைகளும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளைப் படித்து மக்கள் பயன்பெற வேண்டும் என்ற நன்னோக்கில் இக்கையடக்கப் பிரார்த்தனைப் பேழை அன்பளிப்பு செய்யப்படுகின்றது.

இந்நற்செயலுக்காக உதவி செய்த அனைவருக்கும், அவர்களின் பெற்றோர்களுக்கும், குடும்பத்தாருக்கும் அல்லாஹ் ஈருலகிலும் நற்கூலி வழங்குவானாக!

- K.L.M. Ibrahim Madani



## பிரார்த்தனை செய்யும் ஒழுங்குகள்

1. தூய மனதோடு பிரார்த்தனை செய்ய வேண்டும்.
2. பிரார்த்தனையைத் துவங்கும் போதும், முடிக்கும் போதும் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து நபி(ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துக் கூறி பிரார்த்தனை செய்ய வேண்டும்.
3. பதில் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடும், உறுதியோடும் பிரார்த்தனை செய்ய வேண்டும்.
4. அவசியத்தைக்கூறி பிரார்த்திக்க வேண்டும். பிரார்த்தனையில் அவசரப்படக் கூடாது. (அதாவது அல்லாஹ்விடம் ஓரிரு முறை பிரார்த்தனை செய்த பிறகு, கேட்டது கிடைக்க வில்லையானால், அல்லாஹ்வின் மீது அவநம்பிக்கை கொண்டு, பிரார்த்தனையை விட்டு விடக்கூடாது.
5. உள்ளச்சத்தோடு பிரார்த்திக்க வேண்டும்.
6. மகிழ்ச்சியான நேரத்திலும் கஷ்டமான

நேரத்திலும் பிரார்த்திக்க வேண்டும்.

7. அல்லாஹ்வைத் தவிர வேறு யாரிடமும் பிரார்த்திக்க கூடாது.
8. தன் குடும்பம், பொருட்கள், பிள்ளைகள் மற்றும் தனக்கும் கேடு விளைய பிரார்த்தனை செய்யக் கூடாது.
9. சத்தத்தை மிகவும் உயர்த்தாமலும் மிகவும் குறைக்காமலும் அவ்விரண்டிற்கும் மத்தியில், நடு நிலையோடு பிரார்த்தனை செய்ய வேண்டும்.
10. செய்த பாவத்தை மனப்பூர்வமாக ஏற்று, அதற்காக பிழைப் பொறுப்புத் தேடி, அல்லாஹ் அவருக்கு அளித்த அருட்கொடைகளை உளமாற ஒப்புக் கொண்டு, அவற்றிற்காக அல்லாஹ்விற்கு நன்றி செலுத்த வேண்டும்.
11. துஆச் செய்யும் போது அளவிற்கு மேல் சிரமத்தை மேற்கொள்ளாமல் (ராகம் எடுக்காமல்) இருக்க வேண்டும்.
12. தெளிவான உள்ளத்தோடும் பயபக்தியோடும்

அல்லாஹ்வின் அருள் மீது நம்பிக்கை வைத்து, அவனது தண்டனையிலிருந்து பயந்து பிரார்த்தனை செய்ய வேண்டும்.

13. மற்றவர்களின் பொருளை எடுத்து அல்லது அவர்களுக்கு அநியாயம் செய்திருந்தால் அந்தப் பொருட்களை உரியவர்களிடம் திருப்பிக் கொடுத்து அவர்களிடம் மன்னிப்பு கேட்ட பின் அப்பாவத்திற்காக தவ்பாச் செய்ய வேண்டும்.
14. கிப்லாவை முன்னோக்கி பிரார்த்திப்பது சிறந்தது.
15. பிரார்த்தனை செய்யும் போது இரு கைகளையும் உயர்த்துவது சிறந்தது.
16. முடியுமாக இருந்தால் துஆச் செய்வதற்கு முன் உளுச் செய்து கொள்வது சிறந்தது.
17. ஒழுக்கத்துடன் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். (துஆ ஒரு வணக்கம் என்பதாக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.)
18. முதலில் தனக்காக பிரார்த்தனை செய்த பிறகு மற்றவர்களுக்காக பிரார்த்திக்க

வேண்டும். (இறைவா! எனது பாவங்களையும் இன்னாருடைய பாவங்களையும் மன்னிப்பாயாக என்று கேட்பது போல்).

19. அல்லாஹ்வின் அழகிய திருநாமங்கள் மற்றும் அவனுடைய உயர்ந்த பண்புகளைக் கொண்டு அல்லது பிரார்த்தனை செய்பவர் தான் செய்த நல்லமல்களைக் கொண்டு அல்லது உயிரோடு வாழக்கூடிய முஃமினான நல்ல மனிதர்களிடம் தனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யும்படி கேட்கலாம் (இம்மூன்றும் தான் இஸ்லாத்தில் அனுமதிக்கப் பட்ட வஸீலாவாகும்).
20. பாவமான காரியங்களுக்கு அல்லது இரத்த உறவுகளை முறிப்பதற்காக பிரார்த்தனை செய்யக் கூடாது.
21. ஹராமான சம்பாத்தியத்திலிருந்து தவிர்ந்திருக்க வேண்டும். (உணவு, குடிபானங்கள் அணியும் ஆடை இவைகள் ஹலாலானவைகளாக இருக்க வேண்டும்.



## துஆ ஏற்றுக் கொள்ளப்படும் நேரங்களும் நிலைகளும்

1. பர்ளான தொழுகைக்கு அதான் சொல்லப்படும் போது.
2. அதானுக்கும் இகாமத்திற்கும் மத்தியில் கேட்கப்படும் பிரார்த்தனை.
3. இகாமத்து சொல்லப்படும் போது.
4. தொழுகையில் ஸுஜூது செய்யும் போது.
5. ஒவ்வொரு தொழுகையின் கடைசி நேரத்தில் (அதாவது அத்தஹியாத்தில் ஸலாம் கொடுப்பதற்கு முன்னர்).
6. இரவில் தூக்கத்திலிருந்து விழித்ததும் செய்யும் பிரார்த்தனை

யாராவது இரவில் விழித்தெழுந்து

- سُبْحَانَ اللهِ ، وَالْحَمْدُ لِلَّهِ ، وَلَا اِلَهَ اِلَّا اللهُ ، اَللهُ اَكْبَرُ ، وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ

என்று கூறி, அதன் பின்

• اَللّٰهُمَّ اغْفِرْلِيْ

என்று கூறினால் அல்லது ஏதாவது பிரார்த்தனை செய்தால் அது ஏற்றுக் கொள்ளப்படும். அவர் உளு செய்து தொழுதால் அவருடைய தொழுகை ஏற்றுக் கொள்ளப்படும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

7. இரவின் நடுப்பகுதி அல்லது மூன்றாவது பகுதி.
8. லைலதுல் கத்ரின் இரவில் செய்யப்படும் பிரார்த்தனை.
9. மழை பொழியும் போது.
10. வெள்ளிக்கிழமை நாளில் கேட்கும் பிரார்த்தனை.
11. உண்மையான (நம்பிக்கையான) எண்ணத்துடன் ஸம்ஸம் தண்ணீரைக் குடிக்கும் போது.
12. ஒரு முஸ்லிம் தன்னுடைய இன்னொரு முஸ்லிம் சகோதரருக்கு மறைமுகமாக

செய்யும் பிரார்த்தனை.

13. பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு செய்யும் பிரார்த்தனை.
14. பெற்றோர்கள் தன் பிள்ளைகளுக்கு செய்யும் சாபம்.
15. பிரயாணியின் பிரார்த்தனை.
16. நீதியான அரசன் செய்யும் பிரார்த்தனை.
17. நோன்பாளியின் பிரார்த்தனை.
18. பெற்றோருக்கு கட்டுப்பட்டு நடக்கும் பிள்ளையின் பிரார்த்தனை.
19. அநீதி இழைக்கப்பட்டவனின் பிரார்த்தனை.
20. நோயாளியிடம் செய்யப்படும் பிரார்த்தனை.
21. ஒருவரின் உயிர் கைப்பற்றப்பட்டதற்கு பிறகு அவருக்காக மனிதர்கள் செய்யும் பிரார்த்தனை.
22. ஏதாவது ஒரு துன்பம் ஏற்படும் போது செய்யப்படும் பிரார்த்தனை.
23. சேவல் கூவும் சத்தத்தை கேட்கும் போது செய்யப்படும் பிரார்த்தனை.
24. ஸஃபா மலை மீது கேட்கும் பிரார்த்தனை.

25. மர்வா மலை மீது கேட்கும் பிரார்த்தனை.
26. அரஃபாவுடைய நாளில் செய்யும் பிரார்த்தனை.
27. (முஸ்தலிஃபாவிலுள்ள) மஷ்அருள் ஹராம் என்னுமிடத்தில் கேட்கும் பிரார்த்தனை.
28. சிறிய ஜம்ராவிற்குக் கல் எறிந்த பின் கேட்கும் பிரார்த்தனை.
29. நடு ஜம்ராவிற்குக் கல் எறிந்த பின் கேட்கும் பிரார்த்தனை.
30. யுத்த களத்தில் போர் மூளும் போது.

சந்தேகமின்றி ஒரு விசுவாசி, எல்லா நிலைகளிலும் எங்கிருந்த போதிலும் அல்லாஹ்விடத்தில் பிரார்த்தனை செய்ய வேண்டும். ஆனாலும், குறிப்பாக மேலே சொல்லப்பட்ட நேரங்கள், நிலைகள், இடங்களில் துஆக்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு மிக தகுதியுள்ளதாகும்.



# குர்ஆனிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரார்த்தனைகள்

1. எங்கள் இறைவனே! எங்களுக்கு இவ்வுலகில் நற்பாக்கியங்களைத் தந்தருள்வாயாக! மறுமையிலும் நற்பாக்கியங்களைத் தந்தருள்வாயாக! இன்னும் எங்களை (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் காத்தருள்வாயாக! 2:201

2. எங்கள் இறைவனே! நாங்கள் மறந்து விட்டாலோ, அல்லது தவறிழைத்து விட்டாலோ எங்களைக் குற்றம் பிடிக்காதிருப்பாயாக! எங்கள் இறைவனே! எங்களுக்கு முன் சென்றோர் மீது சுமத்திய சுமையை போன்று எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் இறைவனே! எங்கள் சக்திக்கப்பாற்பட்ட (எங்களால் தாங்க முடியாத) சுமையை எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் பாவங்களை நீக்கிப் பொறுத்தருள்வாயாக! எங்களை மன்னித்தருள்வாயாக! எங்கள் மீது கருணை

புரிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன், காஃபிரான கூட்டத்தாரின் மீது (நாங்கள் வெற்றியடைய) எங்களுக்கு உதவி செய்தருள்வாயாக! 2:286

3. எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு நேர் வழியைக் காட்டியபின் எங்கள் இதயங்களை (அதிலிருந்து) தடம்புறளச் செய்து விடாதே! இன்னும் நீ உன் புறத்திலிருந்து எங்களுக்கு (ரஹ்மத் என்னும்) அருளை அளிப்பாயாக! நிச்சயமாக நீயே பெருங் கொடையாளனாவாய்! 3:8

4. எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் (உன் மீது) நம்பிக்கை கொண்டோம், எங்களுக்காக எங்கள் பாவங்களை மன்னித்தருள்வாயாக! (நரக) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக! 3:16

5. என் இறைவனே! உன்னிடமிருந்து எனக்காக ஒரு பரிசுத்தமான சந்ததியைக்

கொடுத்தருள்வாயாக! நிச்சயமாக நீ பிரார்த்தனையைச் செவிமடுத்தருள்வோனாக இருக்கின்றாய். 3:38

6. எங்கள் இறைவனே! எங்கள் பாவங்களையும் எங்கள் காரியங்களில் நாங்கள் வரம்பு மீறிச் செய்தவற்றையும் மன்னித்தருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதியாய் இருக்கச் செய்வாயாக! காஃபிர்களின் கூட்டத்தாருக்கு எதிராக எங்களுக்கு நீ உதவி புரிவாயாக. 3:147

7. எங்கள் இறைவனே! நாங்கள் (இவ் வேதத்தின் மீது) நம்பிக்கை கொண்டோம். எனவே, (இவ்வேதம் சத்தியமானது என்று,) சாட்சி சொல்வோருடன் எங்களையும் நீ பதிவு செய்து கொள்வாயாக! 5:83

8. எங்கள் இறைவனே! எங்களுக்கு நாங்களே தீங்கிழைத்துக் கொண்டோம் – நீ எங்களை மன்னித்துக் கிருபை செய்யாவிட்டால், நிச்சயமாக நாங்கள்

நஷ்டமடைந்தவர்களாகி விடுவோம் 7:23

9. நாங்கள் அல்லாஹ்வையே பூரணமாக நம்பி (அவனிடமே எங்கள் காரியங்களை ஒப்படைத்து)க் கொண்டோம், எங்கள் இறைவனே! அநியாயம் செய்யும் மக்களின் சோதனைக்கு எங்களை ஆளாக்கிவிடாதே! 10:85

10. எங்கள் இறைவனே! இந்த காஃபிர்களான மக்களிடமிருந்து உன் அருளினால் எங்களை நீ காப்பாற்றுவாயாக! 10:86

11. என் இறைவனே! எனக்கு எதை பற்றி ஞானம் இல்லையோ அதை உன்னிடத்திலே கேட்பதை விட்டும் உன்னிடம் நான் பாதுகாப்பு தேடுகிறேன், நீ என்னை மன்னித்து எனக்கு அருள் புரியவில்லையானால் நஷ்ட மடைந்தோரில் நான் ஆகிவிடுவேன். 11:47

12. என் இறைவனே! தொழுகையை நிலைநிறுத்துவோராக என்னையும்,

என்னுடைய சந்ததியிலுள்ளோரையும் ஆக்குவாயாக! எங்கள் இறைவனே! என்னுடைய பிரார்த்தனையையும் ஏற்றுக் கொள்வாயாக!. 14:40

13. எங்கள் இறைவனே! என்னையும், என் பெற்றோர்களையும், முஃமின்களையும் கேள்வி கணக்குக் கேட்கும் (மறுமை) நாளில் மன்னிப்பாயாக!. 14:41

14. எங்கள் இறைவனே! நீ உன்னிடமிருந்து எமக்கு அருளை வழங்கி, எமது காரியத்தில் நேர்வழியை எமக்கு எளிதாக்கி தந்தருள்வாயாக! 18:10

15. என் இறைவனே! கல்வி ஞானத்தை எனக்கு அதிகப்படுத்துவாயாக! 20:114

16. என் இறைவனே! நீ என்னை (சந்ததியில்லாமல்) ஒற்றையாக விட்டு விடாதே! நீயே வாரிசுரிமை கொள்வோரில் மிக்க மேலானவன். 21:89

17. என் இறைவனே! ஷைத்தானின்

தூண்டுதல்களிலிருந்து உன்னிடத்தில் நான் பாதுகாவல் தேடுகின்றேன். 23:97

18. எங்கள் இறைவனே! நாங்கள் உன் மீது ஈமான் கொண்டு விட்டோம், நீ எங்கள் குற்றங்களை மன்னித்து, எங்கள் மீது கிருபை செய்வாயாக! கிருபையாளர்களிலெல்லாம் நீயே மிகச்சிறந்தவன். 23:109

19. என் இறைவனே! நீ என்னை மன்னித்துக் கிருபை செய்வாயாக! நீ தான் கிருபையாளர்களிலெல்லாம் மிக்க மேலானவன். 23:118

20. எங்கள் இறைவனே! எங்களைவிட்டும் நரகத்தின் வேதனையைத் திருப்புவாயாக! நிச்சயமாக அதன் வேதனை நிரந்தரமானதாகும். 25:65

21. எங்கள் இறைவனே! எங்கள் மனைவியரிடமும், எங்கள் சந்ததியரிடமும் இருந்து எங்களுக்குக் கண்குளிர்ச்சியை அளிப்பாயாக! இன்னும்

பயபக்தியுடையவர்களுக்கு எங்களை இமாமாக (வழிகாட்டியாக) ஆக்கியருள்வாயாக!. 25:74

22. என் இறைவனே! நீ எனக்கு ஞானத்தை அளிப்பாயாக. மேலும், ஸாலிஹானவர்களுடன் (நல்லவர்களுடன்) என்னைச் சேர்த்து வைப்பாயாக! 26:83

23. இன்னும், பின் வருபவர்களில் எனக்கு நீ நற்பெயரை ஏற்படுத்துவாயாக! 26:84

24. இன்னும், பாக்கியம் நிறைந்த சுவனபதியின் வாரிசுக்காரர்களில் (ஒருவனாக) என்னை ஆக்கி வைப்பாயாக! 26:85

25. இன்னும் (மனிதர்கள் உயிர் கொடுத்து) எழுப்பப்படும் நாளில் என்னை நீ இழிவு படுத்தாதிருப்பாயாக! 26:87

26. என் இறைவனே! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் புரிந்துள்ள உன் அருட்கொடைகளுக்காக, நான் நன்றி செலுத்தவும், நீ பொருந்திக் கொள்ளும்

விதத்தில் நான் நன்மைகள் செய்யவும், எனக்கு அருள் செய்வாயாக! இன்னும் உம் கிருபையைக் கொண்டு என்னை உன்னுடைய நல்லடியார்களில் சேர்த்தருள்வாயாக! 27:19

27. என் இறைவனே! நிச்சயமாக நான் என் ஆத்மாவுக்கே அநியாயம் செய்து விட்டேன், ஆகவே, நீ என்னை மன்னிப்பாயாக! 28:16

28. என் இறைவனே! நல்லவர்களிலிருந்து நீ எனக்கு (குழந்தையை) தந்தருள்வாயாக. 37:100

29. என் இறைவனே! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் புரிந்த நிஃமத்துக்காக, (அருட் கொடைகளுக்காக) நன்றி செலுத்தவும், உன்னுடைய திருப்தியை அடையக் கூடிய ஸாலிஹான நல் அமல்களைச் செய்யவும் எனக்கு அருள் பாலிப்பாயாக! எனக்கு என்னுடைய சந்ததியையும் ஸாலிஹானவர்களாக (நல்லது செய்பவர்களாக) சீர்படுத்தியருள்வாயாக!

நிச்சயமாக நான் தவ்பா செய்து (உன்பக்கம் திரும்பி) விட்டேன். இன்னும் நிச்சயமாக நான் முஸ்லிம்களில் ஒருவனாக (உனக்கு முற்றிலும் வழிப்பட்டவனாக) இருக்கின்றேன். 46:15

30. எங்கள் இறைவனே! எங்களையும், விசுவாசம் கொள்வதில் எங்களை முந்திவிட்ட எங்களுடைய சகோதரர்களையும் மன்னித்தருள்வாயாக! ஈமான் கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய இதயங்களில் வெறுப்பை ஆக்காதிருப்பாயாக! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன்; மிக்க கருணையுடையவன். 59:10

31. எங்கள் இறைவனே! காஃபிர்களுக்கு, எங்களைச் சோதனை(ப் பொருள்) ஆக ஆக்கிவிடாதே! எங்கள் இறைவனே! எங்களுக்கு மன்னிப்பும் அருள்வாயாக! நிச்சயமாக நீ (யாவரையும்) மிகைத்தவன் ஞானம் மிக்கவன். 60:5

32. எங்கள் இறைவனே! எங்களுக்கு, எங்களுடைய பிரகாசத்தை நீ முழுமையாக்கி வைப்பாயாக! எங்களுக்கு மன்னிப்பும் அருள்வாயாக! நிச்சயமாக நீ எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றலுடையவன். 66:8

33. என் இறைவனே! எனக்கும், என் பெற்றோருக்கும், என் வீட்டில் நம்பிக்கையாளர்களாகப் பிரவேசித்தவர் களுக்கும், முஃமினான ஆண்களுக்கும், முஃமினான பெண்களுக்கும், நீ மன்னிப்பளிப்பாயாக! மேலும், இந்த அநியாயக்காரர்களுக்கு அழிவையேயல்லாது (வேறு எதையும்) நீ அதிகரிக்காதே. 71:28



# நபிமொழியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரார்த்தனைகள்

1. யா அல்லாஹ்! எனது மார்க்கத்திலும் எனது உலக வாழ்விலும் எனது குடும்பத்திலும் எனது செல்வத்திலும் மன்னிப்பையும் நலனையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். யாஅல்லாஹ்! என்னுடைய குறைகளை மறைப்பாயாக! யாஅல்லாஹ்! என் அச்சங்களை அகற்றி எனக்கு அமைதியைத் தந்தருள்வாயாக! யாஅல்லாஹ்! எனக்கு முன்னாலிருந்தும் பின்னாலிருந்தும் எனது வலது புறமிருந்தும் இடது புறமிருந்தும் எனக்கு மேலிருந்தும் எனக்குப் பாதுகாப்பு அளிப்பாயாக! எனக்கு கீழ்புறத்திலிருந்து நான் எதிர்பாராத விதமாகக் கொல்லப்படுவதை உன் வல்லமையைக் கொண்டு நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். (அபூதாவூத்)

2. யாஅல்லாஹ்! எனது உடலில் நலனை

(ஆரோக்கியத்தை)த் தந்தருள்வாயாக! யாஅல்லாஹ்! எனது செவிப்புலனில் நலனை (ஆரோக்கியத்தை)த் தந்தருள்வாயாக! யாஅல்லாஹ்! எனது பார்வையில் நலனை (ஆரோக்கியத்தை)த் தந்தருள்வாயாக! யாஅல்லாஹ்! வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர (வேறு) யாருமில்லை. (அபூதாவூத்)

3. யா அல்லாஹ்! இறைநிராகரிப்பை விட்டும் வறுமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். யா அல்லாஹ்! மண்ணறையின் வேதனையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை. (அபூதாவூத்)

4. யா அல்லாஹ்! நீயே என் இரட்சகன்! வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை. நீயே என்னைப் படைத்தாய். நான் உன்னுடைய அடிமை. நான்

என்னால் முடிந்த அளவிற்கு உனது உடன்படிக்கை மற்றும் வாக்குறுதியின் மீது நிலைத்திருக்கின்றேன். நான் செய்த சகல தீமையைவிட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். நீ எனக்களித்த அருட்கொடைகளைக் கொண்டு உன்பக்கமே நான் மீளுகின்றேன். இன்னும் என்னுடைய பாவங்களை (மனமாற) ஒப்புக் கொள்கின்றேன். எனவே, என்னை நீ மன்னித்தருள்வாயாக! உன்னைத் தவிர வேறு யாரும் பாவங்களை மன்னிக்க முடியாது. (புகாரீ)

5. யா அல்லாஹ்! கவலை, துயரம், இயலாமை, சோம்பல், கஞ்சத்தனம், கோழைத்தனம், கடனின் சுமை மற்றும் மனிதனின் ஆதிக்கம் அனைத்தை விட்டும் நிச்சயம் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (புகாரீ)

6. யா அல்லாஹ்! இந்த பகலின் ஆரம்பத்தைச் சீர்திருத்தம் உள்ளதாகவும் அதன் நடுவை வெற்றியுள்ளதாகவும் அதன்

கடைசியை லாபம் உள்ளதாகவும் ஆக்கியருள்வாயாக! அருளாளர்களுக்கெல்லாம் அருளாளனே! உலக நலவையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். (முஸன்னஃப் இப்னு அபீஷைபா)

7. விதியை பொருந்திக் கொள்ளும் தன்மையையும் மரணத்திற்குப் பின் குளிர்ந்த (சொர்க்க) வாழ்வையும், வழிகெடுக்கும் குழப்பத்திலும் தீய விளைவைத்தரும் செயலிலும் ஈடுபட்டுவிடாது உன்னைச் சந்திப்பதின் ஆசையையும் உன் திருமுகத்தைப் பார்ப்பதில் அடையும் பேரின்பத்தையும் நிச்சயம் நான் உன்னிடம் கேட்கின்றேன். நான் யாருக்கும் அநியாயம் செய்வதிலிருந்தும் அல்லது யாராவது எனக்கு அநியாயம் செய்வதிலிருந்தும் அல்லது நான் அத்துமீறுவதிலிருந்தும் அல்லது யாராவது என்மீது அத்துமீறுவதிலிருந்தும் அல்லது மன்னிக்கப்படாத தவறு மற்றும்

பாவத்திலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (தப்ரானி)

8. யா அல்லாஹ்! கஞ்சத்தனத்திலிருந்து உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகின்றேன், இன்னும் கோழைத்தனத்திலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகின்றேன், இன்னும் தள்ளாத முதுமை வரை உயிர் வாழ்வதிலிருந்து உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகின்றேன். உலகத்தின் குழப்பத்திலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகின்றேன், கப்ருடைய வேதனையிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகின்றேன். (புகாரீ)

9. யா அல்லாஹ்! நல் அமல்கள் மற்றும் நற்குணங்களின் பக்கம் உன்னைத் தவிர வேறு யாரும் நேர்வழி காட்டமுடியாதே, அத்தகைய நல் அமல்கள் மற்றும் நற்குணங்களின் பக்கம் எனக்கு நீ நேர்வழி காட்டுவாயாக! கெட்ட அமல்கள் மற்றும் கெட்ட குணங்களிலிருந்து

உன்னைத்தவிர (வேறு) யாரும் என்னை பாதுகாக்க முடியாதே, அத்தகைய கெட்ட செயல்கள் மற்றும் கெட்ட குணங்களிலிருந்தும் என்னை (தடுத்து) பாதுகாப்பாயாக! (திர்மிதி)

10. யா அல்லாஹ்! என் மார்க்கத்தை எனக்கு நீ சீர்படுத்துவாயாக! என் வீட்டை எனக்கு நீ விஸ்தீரணப்படுத்துவாயாக! என் உணவில் நீ அருள்புரிவாயாக!. (மஜ்மஃ ஸவாயித்)

11. யா அல்லாஹ்! என் உள்ளத்தில் இறையச்சத்தை ஏற்படுத்துவாயாக! இன்னும் அதனைத் தூய்மைப் படுத்துவாயாக! நீயே அதனைத் தூய்மைப் படுத்துபவர்களில் மிகச் சிறந்தவன்! அதனுடைய பொறுப்பாளனும் தலைவனும் நீயே! யா அல்லாஹ்! பிரயோஜனம் இல்லாத அறிவு, பயப்படாத உள்ளம், திருப்தியடையாத மனம் மற்றும் ஏற்றுக் கொள்ளப்படாத பிரார்த்தனையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (முஸ்லிம்)

12. யா அல்லாஹ்! நான் செய்த மற்றும் செய்யாத கெட்ட செயல்களிலிருந்து உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (முஸ்லிம்)

13. யா அல்லாஹ்! உன் அருட்கொடைகள் (என்னைவிட்டு) நீங்குவதை விட்டும், நீ (எனக்கு) அளித்த ஆரோக்கியத்தன்மை (என்னை விட்டு) மாறுவதை விட்டும், உனது திடீர் தண்டனையை விட்டும், உன்னுடைய (சகலவிதமான) கோபங்களை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (முஸ்லிம்)

14. யா அல்லாஹ்! (ஏதேனும்) இடிந்து விழுவதிலிருந்தும், உயரத்திலிருந்து கீழே விழுவதிலிருந்தும், முதுமையிலிருந்தும், நீரில் மூழ்குவதிலிருந்தும், எரிந்து இறப்பதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். மரண நேரத்தில் ஷைத்தான் என்னைத்

தீண்டுவதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். உன் பாதையிலே புறமுதுகு காட்டி கொல்லப்படுவதை விட்டும் (விஷஜந்துக்களால்) கொட்டப்பட்டு இறப்பதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். (அஹ்மத்)

15. யா அல்லாஹ்! உள்ளத்தில் முத்திரையிடப்படும் அளவிற்கு பேராசை ஏற்படுவதிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (ஷரஹுஸ்ஸுன்னா)

16. யா அல்லாஹ்! கெட்ட ஆசைகள், கெட்ட செயல்கள் இன்னும் வெறுக்கத்தக்க குணங்களிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (திர்மிதி)

17. யா அல்லாஹ்! என்னுடைய மார்க்கத்தை எனக்கு நீ சீர்படுத்துவாயாக! (ஏனெனில்) அதுதான் எனது அரண். எனது உலகை எனக்குச் சீர்படுத்துவாயாக! (ஏனெனில்)

அதுதான் நான் வாழுமிடம். எனது மறுமையைச் சீர்படுத்துவாயாக! (ஏனெனில்) அதுதான் நான் திரும்பிச் செல்லுமிடம். எனது வாழ்க்கையில் அதிக நன்மைகள் புரிவதற்கு வாய்ப்பளிப்பாயாக! அனைத்து கெடுதிகளை விட்டும் விடுபட்டதாக எனது மரணத்தை ஆக்கியருள்வாயாக! (முஸ்லிம்)

18. யா அல்லாஹ்! (சகல நல்ல) காரியங்களில் நிலைத்திருப்பதையும், நேர்வழியில் உறுதியையும் நிச்சயம் நான் உன்னிடம் கேட்கின்றேன். இன்னும் உன் அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்திடவும் உன்னை அழகிய முறையில் வணங்கிடவும் நான் உன்னிடம் கேட்கின்றேன். தூய்மையான உள்ளத்தையும் உண்மை உரைக்கும் நாவையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். உனக்குத் தெரிந்த நலவுகளை (எல்லாம்) கேட்கின்றேன். உனக்குத் தெரிந்த எல்லா கெடுதிகளிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். உனக்குத் தெரிந்த

(எல்லாப்) பாவங்களிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (நஸாயி)

19. யா அல்லாஹ்! எனக்கு நேர்வழியைக் காட்டுவாயாக! என் ஆத்மாவின் கெடுதிகளிலிருந்து என்னைக் காத்தருள்வாயாக! (திர்மிதி)

20. யா அல்லாஹ்! நற்காரியங்களைச் செய்யவும், வெறுக்கத்தக்க காரியங்களை விட்டுவிடவும், ஏழைகளை நேசிக்கும் தன்மையையும் தந்து, என் பாவங்களை மன்னித்து, எனக்கு அருள்புரியும்படி நான் உன்னிடம் கேட்கின்றேன். ஒரு கூட்டத்தை நீ குழப்பத்தில் ஆழ்த்த விரும்பினால், குழப்பத்தில் ஆழ்த்தப்படாத நிலையிலேயே என்னை உன்னளவில் மரணிக்கச் செய்து விடுவாயாக! (யா அல்லாஹ்!) உன்னுடைய நேசத்தையும் உன்னை நேசிப்பவர்களின் நேசத்தையும் உன் நேசத்தின் பக்கம் சமீபமாக்கி வைக்கக்கூடிய அமலின்மீது

நேசத்தையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். (திர்மிதி)

21. யா அல்லாஹ்! சிறந்த வேண்டுகோளையும் சிறந்த பிரார்த்தனையையும் சிறந்த வெற்றியையும் சிறந்த அமலையும் சிறந்த நன்மையையும் சிறந்த உயிர்வாழ்வையும் சிறந்த மரணத்தையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். (யா அல்லாஹ்!) என்னை நீ உறுதிப்படுத்துவாயாக! என்னுடைய தராசை (நன்மையால்) அதிக எடையுள்ளதாக ஆக்கியருள்வாயாக! என்னுடைய ஈமானை (நம்பிக்கையை) உறுதிப்படுத்துவாயாக! என் அந்தஸ்தை உயர்த்துவாயாக! என்னுடைய தொழுகையை ஏற்றுக் கொள்வாயாக! என் பாவத்தை மன்னித்தருள்வாயாக! (யா அல்லாஹ்!) சுவர்க்கத்தில் உயர்ந்த அந்தஸ்துக்களையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். (தப்ரானி)

22. யா அல்லாஹ்! நன்மைகளின் ஆரம்பங்களையும் முடிவுகளையும் இன்னும் எல்லா நன்மைகளையும் நிச்சயம் நான் உன்னிடம் கேட்கின்றேன். நன்மைகளின் ஆரம்பம், முடிவு, அதன் வெளிப்படை, அந்தரங்கம் மற்றும் சுவர்க்கத்தின் உயர்ந்த அந்தஸ்துக்களையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். (தப்ரானி)

23. யா அல்லாஹ்! நீ என்னுடைய ஞாபகத்தை உயர்த்துவதையும் என் பாவத்தை மன்னிப்பதையும் என் காரியத்தை சீர்படுத்துவதையும் என் உள்ளத்தை தூய்மைப்படுத்துவதையும் என் அபத்தை (கற்பை) பத்தினித்தனமாக்குவதையும் என்னுடைய உள்ளத்தை இலங்கச் செய்வதையும் என்னுடைய பாவங்களை மன்னிப்பதையும் நிச்சயம் நான் உன்னிடம் கேட்கின்றேன். (யா அல்லாஹ்!) இன்னும் சுவர்க்கத்தின் உயர்ந்த அந்தஸ்துக்களையும் நான் உன்னிடம் கேட்கின்றேன். (ஹாகிம்)

24. யா அல்லாஹ்! என் ஆத்மாவிலும் என் கேள்விப்புலனிலும் என் பார்வையிலும் என் உயிரிலும் என் உடலமைப்பிலும் என் குணத்திலும் என் குடும்பத்திலும் என் உயிர்வாழ்விலும் என்னுடைய மரணத்திலும் என்னுடைய அமல்களிலும் நீ அருள்புரியும்படி நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கின்றேன். ஆகவே, என்னுடைய நற்காரியங்களை நீ ஏற்றுக் கொள்வாயாக! (யா அல்லாஹ்!) சுவர்க்கத்தின் உயர்ந்த அந்தஸ்துக்களையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கின்றேன். (ஹாகிம்)

25. யா அல்லாஹ்! கஷ்டங்கள் ஆட்கொள்வதை விட்டும், விரும்பத்தகாதவை ஏற்படுவதை விட்டும் தீய முடிவுகளை விட்டும் விரோதிகளின் கேலி கிண்டல்களை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன். (புகாரீ)

26. உள்ளங்களை புரட்டக்கூடிய

அல்லாஹ்வே! உன் மார்க்கத்தின் மீது என் உள்ளத்தை உறுதிப்படுத்துவாயாக! (திர்மிதி)

27. உள்ளங்களை திருப்பக்கூடிய அல்லாஹ்வே! உனக்கு வழிபடுவதின் மீது என் உள்ளத்தை திருப்பி விடுவாயாக! (முஸ்லிம்)

28. யா அல்லாஹ்! (உன் அருட்கொடைகளை) எங்களுக்கு அதிகப்படுத்துவாயாக! எங்களுக்குக் குறைத்துவிடாதே! எங்களை கண்ணியப்படுத்துவாயாக! எங்களை இழிவு படுத்திவிடாதே! (உனது அருட்கொடைகளை) எங்களுக்குத் தந்தருள்வாயாக! (உன் அருளைப்பெறாத) துற்பாக்கியவான்களாக எங்களை ஆக்கிவிடாதே! (உன் அருளைப்பெற) எங்களை தேர்ந்தெடுப்பாயாக! பிறரை எங்களைவிட தேர்ந்தெடுக்காதே! எங்களை பொருந்திக் கொள்வாயாக! இன்னும் எங்களைத் தொட்டும் (அமல்களை) பொருந்திக் கொள்வாயாக! (திர்மிதி)

29. யா அல்லாஹ்! எங்களின் எல்லாக் காரியங்களின் முடிவையும் நன்மையாக ஆக்கி வைப்பாயாக! இவ்வுலகின் இழிவை விட்டும் மறுவுலகின் வேதனையை விட்டும் எங்களைப் பாதுகாத்தருள்வாயாக! (அஹ்மத்)

30. யா அல்லாஹ்! உனக்கு மாறு செய்வதை விட்டும் எங்களைத் தடுக்கக்கூடிய (உன்னைப்பற்றிய) அச்சத்தையும், உன்னுடைய சொர்க்கத்தைப் பெற்றுத் தரும் வழிபாட்டையும், உலகச் சோதனைகளை எளிதாகக் கருதச் செய்யும் (மன) உறுதியையும் எங்களுக்குத் தந்தருள்வாயாக! (யா அல்லாஹ்!) எங்களுடைய செவிப்புலன்களையும், பார்வைகளையும் (உடல்) சக்தியையும் நீ எங்களை உயிர்வாழ வைக்கும் காலமெல்லாம் (குறைவின்றி) இயங்கச் செய்வாயாக! அதனையே எங்கள் வாரிசுகளுக்கும் (சந்ததிகளுக்கும்) ஆக்கியருள்வாயாக! எங்களுக்கு அநீதம் செய்தவர்களைப் பழி வாங்குவாயாக! எங்கள்மீது விரோதம் கொண்டவர்களுக்குப்

பாதகமாக எங்களுக்கு நீ உதவி செய்வாயாக! எங்களுடைய மார்க்கத்தில் எங்களுக்கு சோதனையை ஏற்படுத்தி விடாதே! இவ்வுலகையே எங்கள் நோக்கமாகவும் எங்கள் அறிவின் எல்லையாகவும் ஆக்கி விடாதே! (எங்களின் பாவங்களினால்) எங்கள்மீது இரக்கம் காட்டாதவனை எங்களுக்கு பொறுப்பாளியாக ஆக்கி விடாதே! (திர்மிதி)

31. யா அல்லாஹ்! உனது அருளைப் பெற்றுத்தரும் செயல்களையும், உனது மன்னிப்பில் உறுதி கொள்ளும் நிலையையும் அனைத்து நல்லறங்களின் பிரதிபலன்களையும் அனைத்து பாவங்களைவிட்டும் பாதுகாப்பையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கின்றேன். (தப்ரானி)

32. யா அல்லாஹ்! என்னுடைய பாவத்தை, நீ மன்னிக்காமல் விட்டுவிடாதே! கவலையைப் போக்காமல் விட்டுவிடாதே! கடனை அடைக்காமல் விட்டுவிடாதே!

அருளாளர்களுக்கெல்லாம் அருளாளனே! உலக மற்றும் மறுமையின் தேவைகளில் எத்தேவைகளையும் உன் அருளைக் கொண்டு எங்களுக்கு நிறைவேற்றாமல் விட்டுவிடாதே! (தப்ரானி)

33. யா அல்லாஹ்! தீர்ப்பு நேரத்தில் (நாளில்) வெற்றியையும் ஷுஹதாக்களின் அந்தஸ்தையும் நற்பாக்கியம் உள்ளவர்களின் வாழ்க்கையையும் நபிமார்களுடன் இருப்பதையும் எதிரிகளுக்கு எதிராக உதவி கிடைப்பதையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கின்றேன். (ஸஹீஹ் இப்னு குஸைமா)

34. யா அல்லாஹ்! ஈமானில் உறுதியையும் நல்லொழுக்கத்தில் உறுதியையும் வெற்றியைப் பின் தொடரும் லாபத்தையும் உன்னிடமிருந்து அருளையும் ஆரோக்கியத்தையும் பிழை பொறுப்பையும் திருப்பொருத்தத்தையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கின்றேன். (ஹாகிம்)

35. யா அல்லாஹ்! ஆரோக்கியத்தையும் பத்தினித் தனத்தையும் அமானிதத்தை பேணுதலையும் நல்லொழுக்கத்தையும் விதியை ஏற்றுக் கொள்ளும் தன்மையையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கின்றேன். (ஷுஅபுல் ஈமான் லில்பைஹகி)

36. யா அல்லாஹ்! என் நிலையினை நீ பார்க்கின்றாய். என் பேச்சை நீ கேட்கின்றாய். என் அந்தரங்கத்தையும் பகிரங்கத்தையும் (ஒன்று போல்) நீ அறிகிறாய். என் காரியத்தில் எதுவும் உன்னிடம் மறைந்ததாக இல்லை! நான் ஒன்றுமில்லாத ஏழை! இரட்சிப்புத் தேடுபவன்! அபயம் தேடுபவன்! இரக்கத்தன்மையுள்ள, இழகிய உள்ளமுள்ள, செய்த பாவங்களை மனப்பூர்வமாய் ஏற்றுக் கொள்பவன், மிஸ்கீனின் (ஏழையின்) வேண்டுகோளாக உன்னிடம் வேண்டுகின்றேன். பணிந்த நிலையில் மண்டியிடும் பாவியின் மன்றாடுதலாக மன்றாடுகின்றேன். (யா அல்லாஹ்!) பிடரியைப் பணியவைத்து,

மேனியைப் பணிவாய் வைத்து, மூக்கையும் (முகத்தையும்) மண்ணில் வைத்து குருடரான பயந்தவனின் பிரார்த்தனையாக, நான் உன்னிடம் பிரார்த்திக்கின்றேன். (தப்ரானி)

37. யா அல்லாஹ்! எனக்கு நானே அதிக அளவு அநீதி இழைத்து விட்டேன். பாவங்களை மன்னிப்பவன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை. எனவே, உனது பிரத்யேக மன்னிப்பில் என்னை மன்னித்தருள்வாயாக! மேலும் என் மீது அருள் பொழிவாயாக! நிச்சயமாக நீயே அதிகம் மன்னிப்பு வழங்குபவன். கருணை பொழிபவன். (புகாரீ, முஸ்லிம்)

38. யா அல்லாஹ்! நான் முன்னர் செய்தவற்றையும் பின்னர் செய்தவற்றையும் இரகசியமாய் செய்தவற்றையும் பகிரங்கமாக செய்தவற்றையும் எல்லை கடந்து அதிகப்படியாகச் செய்தவற்றையும் மேலும் எந்தப் பிழைகளை நீ என்னை விட அதிகம்

அறிந்துள்ளாயோ அந்தப்பிழைகளையும் நீ மன்னிப்பாயாக! முன்னதாக அல்லது தாமதமாக ஏற்பட்ட அனைத்துப் பொருட்களையும் உருவாக்கியவன் நீயே! வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை. (முஸ்லிம்)

39. யா அல்லாஹ்! உன்னை நினைவு கூர்வதற்கும் உனக்கு நன்றி செலுத்துவதற்கும் நல்ல முறையில் உனக்கு வழிபாடு செலுத்துவதற்கும் எனக்கு நீ உதவி செய்தருள்வாயாக! (அபூதாவூத், நஸாயி)

40. யா அல்லாஹ்! கஞ்சத்தனத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன், மேலும் கோழைத்தனத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன், மேலும் அதிமுதிர்ந்த வயது வரையில் எனது வாழ்வு நீடிக்கச் செய்யப்படுவதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன், மேலும்

உலகத்தின் குழப்பத்தை விட்டும் மண்ணறையின் வேதனையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். (புகாரீ)

41. யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னிடம் சுவர்க்கத்தை கேட்கின்றேன், மேலும் நரகத்திலிருந்து உன்னிடம் பாதுகாவலும் தேடுகின்றேன். (அபூதாவூத்)

42. யா அல்லாஹ்! உன்னுடைய மறைவான அறிவைக் கொண்டும் படைப்பினங்கள் மீதுள்ள உனது ஆற்றலைக் கொண்டும் (நான் கேட்கின்றேன்) நான் (இவ்வுலகில்) வாழ்வது எனக்கு நலவாக இருந்தால் என்னை உயிர் வாழ வைப்பாயாக! நான் மரணிப்பது எனக்கு நலவாக இருந்தால் என்னை மரணிக்கச் செய்வாயாக! யா அல்லாஹ்! மறைவான நிலையிலும் வெளிப்படையான நிலையிலும் உனக்கு அஞ்சி வாழ்வதை கேட்கின்றேன். சந்தோச நிலையிலும் கோபப்படும் போதும் சத்தியத்தை மொழியும் பாக்கியத்தை நான்

உன்னிடம் கேட்கின்றேன். செல்வ நிலையிலும் வறுமையிலும் நடுநிலை பேணுவதை கேட்கின்றேன். முடிவில்லாத அருட்பாக்கியத்தை நான் உன்னிடம் கேட்கின்றேன், மேலும் உனது தீர்ப்பின் மீது திருப்தி கொள்ளும் (மனோ) நிலையை நான் உன்னிடம் கேட்கின்றேன், மேலும் மரணத்தின் பின் இதமான வாழ்க்கையையும் நான் உன்னிடம் கேட்கின்றேன், மேலும் உனது திருமுகத்தை காணும் இன்பத்தையும் நான் உன்னிடம் கேட்கின்றேன், இன்னும் வழிகெடுக்கும் குழப்பத்திலும் தீய விளைவைத்தரும் செயலிலும் ஈடுபட்டுவிடாது உன்னைச் சந்திப்பதில் ஆர்வத்தையும் நான் உன்னிடம் கேட்கின்றேன், யா அல்லாஹ்! ஈமான் எனும் இறைவிசுவாசத்தின் அழகைக்கொண்டு எங்களை அழகு படுத்துவாயாக! மேலும் நேர்வழி பெற்றவர்களாகவும் நேர்வழி காட்டுபவர்களாகவும் எங்களை

ஆக்கியருள்வாயாக! (அஹ்மத், நஸாயி)

43. யா அல்லாஹ்! நிச்சயமாக நீ ஏகன், தனித்தவன், தேவையற்றவன், யாரையும் பெறாதவன், எவராலும் பெறப்படாதவன், உனக்கு நிகராக எவரும் எதுவும் இல்லை என்ற (உன் திருநாமம் மற்றும் உன் பண்புகளைக்) கொண்டு நான் உன்னிடம் கேட்கின்றேன், நீ என் பாவத்தை மன்னித்தருள்வாயாக! நிச்சயமாக நீ, மிக பிழை பொறுப்பவனும் கருணை பொழிபவனுமாய் இருக்கின்றாய். (அபூதாவூத்)

44. யா அல்லாஹ்! நிச்சயமாக புகழ் அனைத்தும் உனக்கே உரித்தானது, வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை. நீ தனித்தவன், உனக்கு யாதொரு இணை துணை இல்லை, மிக கொடையாளன், வானங்களையும் பூமியையும் முன்மாதிரி இன்றி படைத்தவனே! மகத்தவமும் கண்ணியமும் உடயவனே! நித்திய ஜீவனே!

(இத்தனை உனது பெயர் மற்றும் தன்மைகளை) கொண்டு நிச்சயம் நான் உன்னிடம் சுவர்க்கத்தை கேட்கின்றேன், இன்னும் நரகத்திலிருந்து பாதுகாப்பும் தேடுகின்றேன். (அபூதாவூத், திர்மிதி, பராஉ இப்னு ஆஸிப் - ரலி)



## நாம் அன்றாடம் செய்யும் செயல்களுடன் ஓதவேண்டிய பிரார்த்தனைகள்

### 1. தூக்கத்திலிருந்து விழித்ததும் கூறப்படும் துஆ

- ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُورُ))

அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃத மா அமாதனா வஇலைஹின் னுஷுர்.

பொருள்: நம்மை மரணிக்கச் செய்த பின் நமக்கு உயிர் கொடுத்தவனாகிய அல்லாஹ்விற்கே புகழ் அனைத்தும் உரித்தாகுக! நூல்: முஸ்லிம்.

### 2. ஆடை அணிகின்ற போது ஓதும் துஆ

- ((الْحَمْدُ لِلَّهِ الَّذِي كَسَانِي هَذَا وَرَزَقَنِيهِ مِنْ

((غَيْرِ حَوْلٍ مِنِّي وَلاَ قُوَّة))

அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ ஹாதா வரஜகனீஹி மின் ஃகைரி ஹவ்லிம் மின்னீ வலாகுவ்வஹ்.

பொருள்: இ(ந்த ஆடையான)தை (அவனுடைய உதவியோடு) என்னிடமிருந்து எவ்வித பிரயாசை மற்றும் எவ்வித சக்தியுமின்றி எனக்கு அணிவித்து, அதனை அளித்தவனுமாகிய அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் உரித்தாகுக!

நூல்கள்: நஸாயீ தவிர அஹ்லுஸ்ஸுனன் இதனைப் பதிவு செய்திருக்கிறார்கள்.

## 3. புத்தாடை அணியும் போது ஓதும் துஆ

- ((اللَّهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيهِ ، أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وَخَيْرِ مَا صُنِعَ لَهُ ،

((وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَا صُنِعَ لَهُ))

அல்லாஹும்ம லகல் ஹம்து அன்த கஸவ்தனீஹி அஸ்அலுக மின் கைரிஹி வகைரி மாஸுனிஅ லஹு வஅஊது பிக மின் ஷர்ரிஹி வஷர்ரி மா ஸுனிஅ லஹ்.

பொருள்: யாஅல்லாஹ்! புகழ் அனைத்தும் உனக்கே உரியது; நீ தான் எனக்கு அதை அணிவித்தாய்; அதன் நன்மை மற்றும் எதற்காக அதை தயார் செய்யப்பட்டதோ அதன் நன்மையை உன்னிடம் நான் கேட்கிறேன்; இன்னும், அதன் தீமை மற்றும் எதற்காக அதைத் தயார் செய்யப்பட்டதோ அந்தத் தீமையிலிருந்து உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். நூல்கள்: அபூதாவூத், திர்மிதீ

4. **புத்தாடை அணிந்தவருக்காக மற்றவர் கூறும் துஆ**

- ((اِلْبَسْ جَدِيداً وَعِشْ حَمِيداً وَمُتْ

شَهِيداً.))

இல்பஸ் ஜதீதன், வ இஷ் ஹமீதன், வ முத் ஷஹீதன்.

பொருள்: புதியதை நீர் அணிந்து, புகழுக்கு உரியவராகவும் வாழ்ந்து, வீரமரணமும் எய்திடுவீராக! நூல்கள்: புகாரீ, முஸ்லிம்

5. **தன்னுடைய ஆடையை களையும் போது கூற வேண்டிய துஆ**

- ((بِسْمِ اللَّهِ))

பிஸ்மில்லாஹ்

பொருள்: அல்லாஹ்வின் பெயரால்

6. **கழிவறையில் நுழையும் முன் ஓதும் துஆ**

- ((بِسْمِ اللَّهِ اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْخُبْثِ

((وَالْخَبَائِثِ))

பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் குப்ஸி வல் கபாயிஸ்.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் பிரவேசிக்கிறேன். யாஅல்லாஹ்! ஆண் ஷைத்தான் பெண் ஷைத்தான்களி(ன் தீமையி)லிருந்து உன்னைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்.

நூல்கள்: புகாரீ, முஸ்லிம்.

## 7. கழிவறையிலிருந்து வெளியேறும் போது ஓதும் துஆ

- ((غُفْرَانَكَ))

குஃப்ரானக்.

பொருள்: உன்னிடம் பாவம் பொருத்தருள வேண்டுகிறேன்.

நூல்கள்: திர்மிதீ, அபூதாவூது, இப்னுமாஜா

8. **உளு செய்யும் முன் கூறப்பட வேண்டிய துஆ**

- ((بِسْمِ اللَّهِ))

பிஸ்மில்லாஹ்.

நூல்: அபூதாவூத், இப்னுமாஜா, அஹ்மது.

9. **உளு முடிந்த பின் கூறப்படும் துஆ**

- ((أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُولُهُ))

அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹ்.

பொருள்: வணங்கப்படுபவன் அல்லாஹ்வை அன்றி (வேறு எவரும், எதுவும்) இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன்; இன்னும் நிச்சயமாக

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனுடைய (உயரிய) அடியார் மற்றும் அவனுடைய தூதர் என சாட்சி கூறுகிறேன்.

நூல்: முஸ்லிம்.

## 10. வீட்டிலிருந்து புறப்படும் போது ஓதும் துஆ

- ((بِسْمِ اللَّهِ، تَوَكَّلْتُ عَلَى اللَّهِ، وَلاَ حَوْلَ وَلَا قُوَّةَ إِلاَّ بِاللَّهِ))

பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹி வலா ஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ்.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (புறப்படுகிறேன்; என் காரியங்களை முழுமையாக ஒப்படைத்து), அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்துவிட்டேன்; மேலும், அல்லாஹ்வைக் கொண்டல்லாது (பாவத்திலிருந்து) திரும்புதலும்,

(நன்மையானவற்றைச் செய்வதற்கு) சக்தியுமில்லை.

நூல்கள்: அபூதாவூத், திர்மிதீ

## 11. வீட்டினுள் நுழையும் போது ஓதும் துஆ

- ((بِسْمِ اللَّهِ وَلَجْنَا ، وَبِسْمِ اللَّهِ خَرَجْنَا ، وَعَلَى رَبِّنَا تَوَكَّلْنَا))

பிஸ்மில்லாஹி வலஜ்னா, வ பிஸ்மில்லாஹி கரஜ்னா, வஅலா ரப்பினா தவக்கல்னா.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் நுழைந்தோம்; அல்லாஹ்வின் பெயரைக் கொண்டே புறப்படுவோம்; நம்முடைய இரட்சகனின் மீது (நம்முடைய காரியங்களை முழுமையாக ஒப்படைத்து) நம்பிக்கையும் கொண்டிருக்கிறோம்.

நூல்: அபூதாவூத்

## 12. பள்ளியில் நுழையும் போது கூறக்கூடிய துஆ

- ((بِسْمِ اللَّهِ ، وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلَى رَسُولِ اللَّهِ اللَّهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ.))

பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரஸூலில்லாஹி அல்லாஹும்மஃப்தஹ்லி அப்வாப ரஹ்மதிக்.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் நுழைகின்றேன். அருளும் சாந்தியும் அல்லாஹ்வின் தூதர் மீது உண்டாவதாக! யா அல்லாஹ் உன்னுடைய அருள் வாயில்களை எனக்கு நீ திறப்பாயாக! நூல்: அபூதாவூது.

## 13. பள்ளியிலிருந்து வெளியேறுகின்ற போது ஓதும் துஆ

- ((بِسْمِ اللَّهِ وَالصّلَاةُ وَالسَّلَامُ عَلَى رَسُولِ

اللَّهِ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ فَضْلِك ، اللَّهُمَّ اعْصِمْنِي مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ)).

பிஸ்மில்லாஹி வஸ்ஸலாது வஸ்ஸலாமு அலா ரஸூலில்லாஹி, அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக மின் ஃபள்லிக, அல்லாஹும் மஃஸிம்னீ மினஷ் ஷைதானிர்ரஜீம்.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால், அருளும் சாந்தியும் அல்லாஹ்வின் தூதர் அவர்களின் மீது உண்டாகுக! யாஅல்லாஹ்! நிச்சயமாக நான், உன்னுடைய பேரருளிலிருந்து உன்னிடம் கேட்கிறேன்; யா அல்லாஹ்! தூக்கியெறியப்பட்ட ஷைத்தானிலிருந்து என்னைப் பாதுகாப்பாயாக!

நூல்: ஸஹீஹ் இப்னுமாஜா

## 14. பாங்கின் போது கூறப்படும் துஆ

முஅத்தின் கூறுகின்ற வார்த்தைகளை நாமும் திருப்பி அப்படியே கூற வேண்டும்.

'ஹய்ய அலஸ்ஸலாஹ்' மற்றும் 'ஹய்ய அலல் ஃபலாஹ்' என்று முஅத்தின் கூறும் போது நாம் கீழ்காணும் துஆவை கூற வேண்டும்.

- ((لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ)).

லா ஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ்.

பொருள்: அல்லாஹ்வைக் கொண்டல்லாது (பாவத்திலிருந்து) திரும்புதலும், (நன்மையான வற்றைச் செய்வதற்கு) சக்தியுமில்லை.

நூல்கள்: புகாரீ, முஸ்லிம்.

15. **பாங்கு முடிந்த பிறகு நபி(ஸல்) அவர்கள் மீது ஸலாவாத்து கூறி பின்வரும் துஆவை ஓத வேண்டும்**

- ((اللَّهُمَّ رَبَّ هَذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ ، وَالصَّلاَةِ الْقَائِمَةِ ، آتِ مُحَمَّداً الْوَسِيلَةَ وَالْفَضِيلَةَ ، وَابْعَثْهُ مَقَاماً مَحْمُوداً الَّذِي وَعَدْتَهُ.))

அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித் தஃவதித் தாம்மதி, வஸ்ஸலாதில் காயிமா ஆதி முஹம்மதனில் வஸீலத வல்ஃபளீலத, வப்அஸ்ஹு மகாமம் மஹ்மூதனில்லதீ வ அத்தஹ்.

பொருள்: நிறைவான இவ்வழைப்பு மற்றும் நிலை பெற்று விட்ட தொழுகையின் இரட்சகனே! முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு வஸீலா (சுவனத்தில் உள்ள உயர்பதவி)மற்றும் சிறப்பை நல்குவாயாக! நீ வாக்களித்துள்ளாயே அத்தகைய (போற்றுதலுக்குரிய இடமான) மகாமம் மஹ்மூதாவில் அவர்களை எழுப்புவாயாக!

நூல்: புகாரீ

## 16. தக்பீருக்குப் பின் ஓதும் துஆ

- ((اللَّهُمَّ بَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا

بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ ، اللَّهُمَّ نَقِّنِي مِنْ خَطَايَايَ كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ ، اللَّهُمَّ اغْسِلْنِي مِنْ خَطَايَايَ ، بِالثَّلْجِ وَالْماءِ وَالْبَرَدِ.))

அல்லாஹும்ம பாயித் பைனீ வபைன கதாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிகி வல் மக்ரிபி, அல்லாஹும்ம நக்கினீ மின் கதாயாய கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு மினத் தனஸ், அல்லாஹும் மஃக்ஸில்னீ மின் கதாயாய பிஸ்ஸல்ஜி, வல்மாயி, வல்பரத்.

பொருள்: யா அல்லாஹ்! கிழக்கு மற்றும் மேற்கிற்கிடையே நீ தூரமாக்கி வைத்திருப்பது போன்று எனக்கு மற்றும் என் பாவங்களுக்கிடையே நீ தூரமாக்கி வைப்பாயாக! யா அல்லாஹ்! மிக்க வெண்மையான ஆடை அழுக்கிலிருந்து சுத்தப்படுத்தப்படுவது போன்று என்

பாவங்களிலிருந்து என்னை நீ சுத்தப் படுத்துவாயாக! யா அல்லாஹ்! பனிக்கட்டி, தண்ணீர், ஆலங்கட்டி ஆகியவற்றைக் கொண்டு என் தவறுகளிலிருந்து என்னை நீ கழுவுவாயாக! (நூல்கள்: புகாரீ, முஸ்லிம்)

## 17. ருகூவில் ஓதும் துஆ

- ((سُبْحانَ رَبِّيَ الْعَظِيمِ))

ஸுப்ஹான ரப்பியல் அழீம். (மூன்று முறை)

பொருள்: மகத்தான என்னுடைய இரட்சகன் தூயவன் (அவனை நான் துதிக்கிறேன்).

நூல்: ஸஹீஹ் அத்திர்மிதீ

- ((سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ ، اللَّهُمَّ اغْفِرْ لِي.))

ஸுப்ஹான கல்லாஹும்ம ரப்பனா வபி ஹம்திக அல்லாஹும் மஃஃபிர்லீ.

பொருள்: எங்களுடைய இரட்சகனாகிய யா அல்லாஹ்! உன்னுடைய புகழைக் கொண்டு உன்னை நான் துதிக்கிறேன்; யா அல்லாஹ்! எனக்கு பாவம் பொருத்தருள்வாயாக!

நூல்கள்: புகாரீ, முஸ்லிம்.

- ((سُبُّوحٌ ، قُدُّوسٌ ، رَبُّ المَلاَئِكَةِ وَالرُّوحِ.))

ஸுப்பூஹுன், குத்தூஸுன், ரப்புல் மலாயிகதி வர்ரூஹ்.

பொருள்: (அவனுக்கு தகுதியற்ற பண்புகளிலிருந்து) தூய்மைபடுத்தப்படுபவன்; (அவனுக்கு தகுதியற்ற பண்புகளிலிருந்து) பரிசுத்தப் படுத்தப்படுபவன்; மலக்குகள் மற்றும் ஜிப்ரீல் (அலைஹிஸ் ஸலாம்) அவர்களின் இரட்சகன்.

நூல்: முஸ்லிம், அபூதாவூது

